உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - ஐப்பசி - 2015 - அக்டோபர் இதழ் - 40

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. ம. **கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

மருப்பொசித்த செங்கண்மால் பின்பிறந்த மங்கையினை
மணங்கொண் டானை
மங்கலச்செந் தமிழ்மதுரை மன்னர்குல மகளாகி மதுரை ஆண்ட
மயிலனைய மரகதப்பெண் மீனாட்சி என்னுமொரு மாணிக் கத்தை
மலையரையன் மேனையிவர் மடிவளர்ந்த கலைமயிலை
மாலைசூடி

இருப்பவனை எழில்தில்லை அம்பலத்தும் நடமாடி இருப்பான்
தன்னை
இருகாலில் ஒருசிலம்பு மறுகாலில் கழலுடனே எழுந்த ஓசை
இருசெவியில் ஒலிஎழுப்ப எழில்முழவு பாங்கொலிப்ப இருகண் காட்டி
எழில்வனமாம் வன்னிவனம் இருக்கின்ற அடியவரை என்றும்
காக்கும்

வரப்புயர்ந்த கழனிகளில் வாழ்வாளை வான்பாய விண்மீன்
எல்லாம்
வந்துதரை வீழுங்கால் மின்மினிகள் தாம்வெருளும் வளமை கண்டு
வனத்துறையும் புட்களெலாம் கனிந்தகனி கெத்துவது கண்டு வக்கும்
வரியரவம் மதிகங்கை கொன்றையந்தார் சூழவிடை ஏறு கின்ற

பொருப்புடைய ஈசனவன் புல்லுமொரு மார்பழகி பூதம் சூழப்
புகழ்கயிலைக் கோமானின் புன்னகைக்கு மயங்குகிற புனித
நங்கை
போற்றுதிரு நெல்லையெனும் பொற்பதியைக் காப்பாளைப் போற்றிப்
பாதப்
போதுகளில் பூச்சூடிப் போற்றிநிதம் வணங்குவர்தாள் போற்ற லாமே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

இம்மாதம் 8ஆம் தேதி (08.10.2015) பிரம்ம ஐக்கியம் ஆகிவிட்ட தெய்வத்திரு பூஜ்ய ஸ்ரீ சுவாமி தயானந்த சரஸ்வதி அவர்கள் இயற்கை எய்திய 16ஆம் நாள் நிகழ்விற்குச் சென்று வந்தேன். அங்கு ஏறக்குறைய அறுபது, எழுபது துறவிகளும், ஐநூறு சீடர்களும் அனுமதிக்கப்பட்டிருந்தனர். அங்கு அஞ்சலி செலுத்தும் சமயத்திலோ, தயானந்த சுவாமிகள் பற்றிய கருத்துக்களைப் பகிர்ந்து கொண்ட சமயத்திலோ மகேஸ்வர பூஜை நடந்த சமயத்திலோ, ஓதப்பட்ட சிவபுராணம், தேவாரம், பகவத்கீதை ஸ்லோகங்கள் ஆகியவற்றின் ஒலியைத் தவிர எந்தவிதமான சத்தமும் எழவில்லை. எல்லாச் சடங்குகளும் அந்த நிகழ்வை நடத்திய அருளாளர் கட்டளையிட்ட வண்ணம் அமைதியாகவும், ஆழ்ந்த ஈடுபாட்டோடும் நிகழ்த்தப்பட்டன.

ஆழ்ந்த ஆன்மிக உணர்வும், குருபக்தியும் நிறைந்திருக்கும் பொழுது அமைதி என்பது இயல்பாகிவிடுகிறது. சிறு சத்தம் கூடச் காதிற்குச் கசப்பாகி விடுகின்றது. இந்த நன்னடத்தை, ஒழுக்க முறைகளை நம்முடைய மாணவர்களுக்கும், இளைஞர்களுக்கும் கற்பிக்க வேண்டும். நடைமுறைப்படுத்த வேண்டும். இதனைச் செய்ய விரும்பினால் நாம் முதலில் செய்ய வேண்டியது, குழந்தைகளுக்குப் பக்தி பற்றிய அறிவை ஊட்ட வேண்டும். இறைவனை வணங்குவது, அவன் பெயரைச் சில முறைகளேனும் சொல்வது, அவன் புகழைப்பாடுவது என்பதை பழக்கப்படுத்த வேண்டும். அதனைச் செய்துவிட்டால் அவர்களுடைய மனம் தானாகவே நல்ல நெறிமுறைகளிலே செல்லும்.

இந்த நவராத்திரி காலத்திலே கலைமகளைப் பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்லிச் சகலகலாவல்லிமாலை, சரஸ்வதி அந்தாதி போன்ற பாடல்களைப் படிக்கப் பயிற்றுவித்து அவர்களுடைய நெஞ்சத்தைப் பக்தி வழி செலுத்தினால் மனம் நெறிமுறைகளை ஏற்கின்ற பக்குவத்தையும் அவசியத்தையும் அறிந்துவிடும். இந்தக் காலகட்டத்தில் ஆசிரியப் பெருமக்கள் குழந்தைகளைக் கருணையோடும், கண்டிப்போடும் நடத்துவார்களே ஆனால் அவர்களுக்குக் குருபக்தியும் தோன்றும். இதனாலே, குருவின் பால் மரியாதை, அன்பு முதலியன தோன்றிக் குருவின் வார்த்தைகளை மீறாத நல்ல சீடர்களாக மாறுவார்கள். நல்ல பண்புடையவர்களாக உயர்வார்கள். நேர்மையும் உழைப்பும் கொண்டவர்களாக மலர்வார்கள். வாழ்க்கையின் உச்சத்தைத் தொடுவார்கள். குழந்தைகள், ஆசிரியப் பெருமக்கள் முயல்வீர்களாக!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**வேறுபாடுகள், இரட்டை (துவைதம்) :**

**திருவாக்கு :**

1) "நான் எனவும் நீ எனவும் நாடல் உடலைக் குறித்தே..." (104/8)

2) "ஈது எனது யான் இவன் என்று எண்ணி எண்ணி
ஏழையர்போல் தீது அடைந்தால் ...." (111/ 7)

3) "இட்டமொடு நாமஉரு எய்தி, மனம் சுட்டி உறும்
சுட்டறிவு நீங்கும் நிலை தோய்வது என்றோ ...." (134/6)

4) "... உருநாமம் நாடி வரும் நலிவு பாராதிருக்க வரம்தா .." (21/29)

5) "துன்பத் துவிதம் தொலைந்த சுக நிட்டையிலே
இன்பத்து உருவாய் இருப்பது என்றோ நெஞ்சகமே." (116 /29)

6) "அத்திபாதிப்பிரிய அதிவெளியாய் இருந்தால்
சுத்தம் இலாச் சீவபரத் தொய்தம் எங்கே அஞ்சுகமே." (135/11)

(அத்திபாதிப்பிரியம் = சத்சித்ஆனந்தம் = பிரம்மம்)

**உபதேசத் திரு வாக்கியங்கள் :**

1) "சுக துக்கம் உள்ள வரையில் தார தம்மியம் நீங்காது." (139/10)

2) "ஒன்றிலே தோன்றி அனைத்து உருவமுமான உணர்வுக்கு,
பகை, உறவு என்று உரைப்பது எங்கே ?" (155/64)

3) "அதிட்டானமாகிய 'தான்' ஆகப் பார்க்கும் போது
'நான் - அவன்', எங்கே ?" (138/7)

4) "நாம ரூபம் நாடாமல், பகிர் முகம் இன்றி, இருக்க வேண்டும்" (137/4)

5) "நிவிர்த்தியாய் இருக்க வேண்டும், அல்லது, நாம ரூப நாட்டம்
வந்தால், அத்துவிதமாய் இருக்க வேண்டும்." (144/23)

**கருத்துரை :**

நான் - நீ எனும் உடல் வேறுபாடுகளும், உறவு - பகை எனும் உணர்வு வேறுபாடுகளும், இன்ப - துன்பம் எனும் அனுபவ முரண்பாடுகளும், பெயர் - வடிவம் எனப் பாகுபாடு செய்யும் மன அலைவுகளும், தொய்தம் (துவிதம்) எனப்படும் இரட்டைகளாகும். துவிதம் தொலைந்தால், சீவாத்மா - பரமாத்மா எனும் இரட்டையின்றி, அதிவெளியும் பரமார்த்திகமுமான அத்துவித நிலை அடையலாம். இந்நிலை பெறச் செயல் விரிவு மற்றும் மனவிரிவு இன்றி (நிவிர்த்தியாக) இருக்க வேண்டும்.

**V கற்பிதம், பாவனை (அஞ்ஞானம்) :**

**திருவாக்கு :**

1) "கற்பிதத்தை மெய்யாகக் கண்டு கண்டு துன்பமுறாது ..." (106/16)

2) "சீவேசுர செகத்தைச் சித்து ஒன்றாய்த் தோற்றுவிக்க
பாவனையால் பேதித்துப் பற்றுகின்றாய் நெஞ்சகமே" (117/30)

3) "அச்சு எல்லாம் பொய் என்று அறிந்தால் அதில் ஒருவன்
துச்சமற நன்மை அறச்சொன்னாலும் - அச்சொல்லும்
பொய்யோ ? அதுமெய்யோ ? போதமில்லா நெஞ்சமே
ஐயோ ! இதில் நோவார் யார் ?" (96/150)

4) "ஓங்குதனி மருப்பு ஆனை ஒருபாகன் கைவசமாய் உழன்றது
..சயிலம்தன்னைப் பாகன் எற்றாலோ துன்பம் செய்தான்....
..அங்குசத்தால் மத்தகத்தில் அடித்து அடித்துப் புன்மை செய்ய
அல்லல் உறும் அக்கயம்தான் யாது? என்னில் யானாகும்
அந்தோ அந்தோ.அப்பாகன் யார் என்னில்
அஞ்ஞானம் என்பவனே, அவனைவெல்ல, இப்பாரில்
எவ்விடத்துச் சென்றாலும் உனை அன்றி ஏதும் காணேன் ....
உன்னிடத்தில் வந்தேன் என் பகை நீங்கக் குறிக்க
வேண்டும்."

(மூன்று பாக்களைக் கொண்டு கூட்டியது) (34,62-64)

**உபதேசத் திரு வாக்கியங்கள் :**

1) "பூமியில் உண்டான வஸ்துக்களைக் கற்பிதம் என்றும் தன்மயம் என்றும் சொல்லலாம் ......" (149/38)

2) "தன்னிடத்தில் பெருமை, சிறுமை, பகை, உறவு, சுகதுக்கமாய் வருகிற சங்கற்பம் கற்பிதம், ஆரோபம், அத்தியாசந்தான்." (155/61)

(ஆரோபம் : ஒன்றை மறைத்து, மற்றொன்றை ஏற்றிக் கூறுதல்.
அத்யாசம் : ஒன்றில் இல்லாததை, இருப்பதாக ஏற்றிக் காட்டுதல் .)

3) "அக்கினியில் எவ்வளவு பொறிகிளம்பினாலும், அக்கினிக்கு லாபம் இல்லாதது போல,பூரணமான தன்னிடத்தில், தேகாதி முதலாய் வாழ்ந்ததாயும், தாழ்ந்ததாயும் உள்ள என்ன நினைவு வந்தாலும் கற்பிதமே ; தான் நித்தியம்." (154/59)

4) "சிற்றறிவாகிய சீவ அறிவே எல்லாவற்றுக்கும் மூலம்." (151/47)
(சிற்றறிவு = அஞ்ஞானம், எல்லாவற்று = அனைத்துத் தீமைகள்)

5) "சிற்றறிவிலேதான் உயர்வு தாழ்வான தாரதம்மியங்கள்." (146/28)

6) "தான் சித்து ரூபன் என்கிற புத்தி வாங்காமல் இருந்தால், நான் - நீ என்கின்ற பேதமாகிய அஞ்ஞான நீக்கம் வரும்." (154/57)

**கருத்துரை :**

நாம் காணும் பற்பல பொருள்களும் மற்றும் உலகியலில் பெறும் பகை - உறவு, பெருமை - சிறுமை போன்ற எண்ணங்களும், மனத்தின் கற்பனை (சங்கற்பம், பாவனை) எனக் கூறலாம. இவற்றை நிரந்தரமானவை என நம்புவதாலேயே நாம் துன்ப மடைகிறோம். சீவன் - ஈஸ்வரன் - செகம் நாம் வேறுபடுத்திக் கூறுவன எல்லாம் பிரிவற்ற ஒன்றாகவே படைக்கப் பட்டது. ஆனால், நமது சிற்றறிவு (அஞ்ஞானம்) காரணமாகவே நாம் இவற்றை வேறுபடுத்துகிறோம். அஞ்ஞானமானது ஞானத்திற்கு எதிர்மறையாகும். தன்னை, வேறுபாடுகளற்ற பூரணம் என உணர்பவர் ஞானமுடையவராவார். இத்தகையவர், வேறுபாடு காட்டும் அஞ்ஞானத்தால் துன்புறமாட்டார்.

VI மாயை :

திருவாக்கு :

1) "ஏதோ தறிகள்ளன் என்பதுபோல் ஒன்று தெய்வமே - இந்தத்
தீதே இலாத சிவத்தினில் தோன்றுதே தெய்வமே." (130/8)

2) "..... தண்ணென்ற கங்கையது முதலான நதிகளும்
தாழ்வற்ற துருவ இறையும்
கீழான சரஅசர உயிர்கள்பல யாவையும்
கெம்பீர உததி தன்னில்
கிளர்கின்ற அலைகள்போல் தோன்றியே வரும்இவை
கிளர்த்த ஒரு ஏது அற்று,
வாழ்கின்ற இவை அலைகள் போலவே தோன்றி அதில்
மாயும் என வேதம் அறையில் ....
... கீழான புத்திகொடு துன்பமயம் ஆகியும்
கெட்டேன் எனப் பகர்ந்து
நிழல் என அறியாது வீணாள் கழித்தஎனை
நின்னடியன் ஆக்க நினைவாய் ...
... நீள்மாயை உடைய மாயனே." (49/75)

3) "தொன்றுவரு மாயா துவந்துவமாம் சொப்பனம் விட்டு
என்று தொலையும் எனக்கு என்தாயே - அன்றுவரை
நஞ்சுண்டோன் போலிருந்து நான்மெலிந்து வாடுதலின்
துஞ்சித் தொலைதல் சுகம்."

4) "மாயா இருளிரவில் வந்தகனா விட்டுஒழிந்து
நீயாம் நிலைதனிலே நில்லாதது என்னமதி." (105/11)

5) "காண்பனவால் உண்டு எனலாய்க் காண்பதற்றால் இல்லாத
வீண்பயிலும் மாயை விதிரித்தமதாய் ...." (94/146)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1) "வகையாகக் கண்டு மயங்காமல், தொகையாகக் கண்டு
சும்மா இருக்க வேண்டும்" (149/39)

2) "பிரபஞ்சம் காலத்திரயத்திலும் இல்லாதபடியினாலேயும்
ஒரு நினைவு வரும்போது, ஒரு நினைவு அழிந்து போகிறபடியினாலேயும்
காணப்பட்டன எல்லாம் அழிந்து போகிறபடியினாலேயும்
மித்தை என்று சொல்லுகிறதில் சந்தேகம் இல்லை." (157.73)

3) "இந்திரசாலக் காரனிடத்தில், கந்தர்வபுரம் தோன்றி, நில்லாமல் அழிந்துபோவது போல, தன்னிடத்தில் உண்டாகா நின்ற சங்கற்பம் எவ்வளவோ அநேகமாய் வந்தும் ஒன்றும் நிற்கவில்லை"

(143/21)

4) "மனம் முதலாகிய பிரபஞ்ச இயல்புகளும் மேக ஆடம்பரம்தான்."

(151/48)

5) "தன்னிடத்தில் அகங்காரம் பிராந்தி மூலம்." (140/13)

6) "இத்தனையும் மாயாமயம் அலவோ? உள்ளபடி முடியும்"

(142/18)

**கருத்துரை :**

பிரபஞ்சம் முழுமையும் தோற்றப்பாடு (மித்தை) மட்டுமே என்பது உண்மையா கனவா ? நான் இருக்கிறேன் ? எனது இருப்பும், இவ்வுலக வாழ்க்கையுமே மாயைதானா ? எனது எண்ணங்களும் செயல்களும் தோற்றமானால், நான் சும்மாவே இருந்துவிடலாமே ? எனது அறிவை, அஞ்ஞானமென உறுதி கூறினால், குறைபாடுடைய அஞ்ஞான அறிவின் மூலமாக நான் எவ்வாறு ஞானம் பெறலாகும் ? மாயை என்பதை எத்தகையது எனச் சரியாகக் கூற முடியவில்லையே ?

(பிற்குறிப்பு : எனது அஞ்ஞானம் மூலமாக, ஞானம் பெறுதல் எவ்வாறு என்பதற்கான விளக்கமாவது : பரப்பிரம்மத்தின் சுத்த சத்துவமே மாயை எனப்பட்டுள்ளமையால், மாயைக்கு ஆட்பட்ட எனது அஞ்ஞானத்தில் சத்துவக் கூறு மட்டும் கொண்டு ஆய்வு செய்வதனையே விவேகம் என்கிறோம். விவேகம் மூலமாக ஞானம் பெறலாகும் என்பதைத்தான் இங்கு உறுதிசெய்கிறோம். உலகியலையும், அனுபவிப்புகளையும் ஆய்வுசெய்யும் விவேகி, இவையெல்லாம் நிரந்தரமல்லாது, மாறுபட்டுக் கொண்டே உள்ளன (அநித்யம்) எனவும், ஆனால் நாம், மாறுபடாத, எப்போதுமுள்ள பொருளை (நித்ய வஸ்து) உணர முற்பட வேண்டும் எனவும் உந்தப்படுவதால் அநித்யம் பற்றிய விவேகமும் கூடப் பயனுடையதே எனப்படுகிறது.

இதுவரை கூறப்பட்ட ஒவ்வொரு கோட்பாட்டையும் உறுதிபட நிறுவிய ஆண்டவர், மாயை பற்றிக் கூறும் போது மட்டும், ஏதோ, கனா, இந்திரசாலம், என்பன போன்ற உறுதிப்பாடற்ற சொற்களைப் பயன்

படுத்துகிறார். மாயை என்பதே, விவாதித்து நிறுவவோ, வரையறை கூறுவோ இயலாதது எனும் பொருளில், அதனை அநிர்வ சனீயம் என அத்வைதம் கூறுகிறது. ஆண்டவர், வேறெந்தக் கோட்பாடு மூலமாகவேனும் மாயையை வாதிக்கவில்லை. ஆதலால், மாயைபற்றி ஆண்டவர் கூறுவதை மாயாவாதம், எனல் பொருந்தாது எனத் தெரிகிறது. பிரபஞ்சம், உலகம், தான், தன்னுடைய பொருள் மற்றும் அஞ்ஞானம் என்பதெல்லாம் மாயையினுட்பட்டவை என்பதன் மூலமாக, இவையெல்லாம் தோற்றப்பாடுகள் (மித்தை) மட்டுமே என்பதை உறுதிப் படுத்த முடிகிறது.

மாயை மற்றும் அஞ்ஞானம் பற்றிய விவேகம் பெற்ற ஒருவர், தனது அவித்தை (அஞ்ஞானம்) பற்றி அறியவும் அதனை முழுமையுமாகச் சத்துவ குணமாக மாற்றிவிடவும் முயலுவார். இந்த முயற்சியை, வைராக்ய சாதனை என்கிறார்கள். இது பற்றி இனிக் காண்போம்.)

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

12.09.2015 சனிக்கிழமை அன்று சனாதனதர்ம உலகப்பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்கள் சார்பில் ஆசிரியர்தின விழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள். நாச்சியப்ப சுவாமிகள் கலைக் கல்லூரி முதல்வர் முனைவர் பா.செல்லப்பா வரவேற்புரையாற்றினார். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியின் துணைமுதல்வர் திருமதி. RM. வள்ளியம்மை, நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் திருமதி. கே. கண்ணாத்தாள், கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியின் முதல்வர் திருமதி மணிமொழி மோகன் ஆகியோர் நல்லாசிரியர் விருதுபெற்ற பெருமக்களைப் பாராட்டிப் பேசினர். SMSV ஆண்கள் மேல்நிலைப் பள்ளியின் உதவித் தலைமை ஆசிரியர் திரு. M. ஹென்றி பாஸ்கர், பொற்கிழிக் கவிஞர் திரு. கா. நாகப்பன், புதுவயல் அரசு உயர்நிலைப் பள்ளியின் மேனாள் தலைமை ஆசிரியை திருமதி துளசிமணி

ஆகியோர் பாராட்டுப் பெற்றனர். டாக்டர் அழகப்பச் செட்டியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் மேனாள் தமிழ்ப் பேராசிரியர் திரு. மா. கண்ணப்பன் வாழ்த்துரை வழங்கினார். உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் முனைவர் G. இரவீந்திரன் நன்றி கூறினார்.

09.09.2015 புதன்கிழமை அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் பெற்றோர் ஆசிரியர் கழகத் தொடக்கவிழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையேற்று ஆசியுரை வழங்கினார்கள். கல்லூரி முதல்வர் முனைவர் பா. செல்லப்பா அனைவரையும் வரவேற்றுப் பேசினார். வணிகவியல் துறைத் தலைவர் பேராசிரியர் M. சீதாலெட்சுமி நன்றி நவின்றார். பெற்றோர் ஆசிரியர் கழகப் பொறுப்பாளர்களாக முனைவர் பா. செல்லப்பா (தலைவர்) திரு. P. குணசேகரன் (துணைத் தலைவர்) திரு. TRM. அழகப்பன் (செயலர்) திருமதி. M. சீதாலெட்சுமி (இணைச் செயலர்) திரு. S. ஜெயராஜ் (பொருளாளர்) ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

7.09.2015 திங்கட்கிழமை அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி மற்றும் காரைக்குடி அரசு மருத்துவமனை, செம்பனூர் அரசு மருத்துவமனை இணைந்து இரத்ததான முகாமும், தேசிய ஊட்டச்சத்து வார விழாவும் நடைபெற்றது. முனைவர் பா. செல்லப்பா வரவேற்புரை ஆற்றினார். கோவிலூர் ஆதினம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள். இரத்த வங்கி மருத்துவ அலுவலர் டாக்டர் செல்லமுத்து, டாக்டர் ஆல்வின் ஜேம்ஸ், சுகாதார அலுவலர் திரு. அழகப்பன், வட்டார சுகாதார ஆய்வாளர் திரு. தனபால் ஆகியோர் கலந்து கொண்டார்; 43 பேர் இரத்ததானம் செய்தனர். திட்ட அலுவலர் பேராசிரியர் திருமதி. கஸ்தூரி நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

28.8.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் சார்பில் "காட்சித் தகவல் உலகத்தைக் காணுவோம்" என்னும் தலைப்பில் ஒரு நாள் கருத்தரங்கம் நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் கருத்தரங்கைத் தொடங்கி வைத்தார். முதல்வர் பா. செல்லப்பா வரவேற்புரை நிகழ்த்தினார்.

எடிட்டர் லெனின் கலை இயக்குநர் திரு. தோட்டா தரணி, டாக்டர் எஸ். இராஜநாயகம், ஒளிப்பதிவாளர் திரு. கண்ணன் ஆகியோர் கலந்து கொண்டு தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டனர். பல்வேறு பள்ளிகளைச் சேர்ந்த 150க்கும் மேற்பட்ட பள்ளிகளில் பன்னிரண்டாம் வகுப்பு மாணவர்கள் பங்கு கொண்டு பயன்பெற்றனர். ஆலோசகர் டாக்டர் சே. குமரப்பன் நன்றி கூறினார்.

11.09.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் பாரதி விழா நடைபெற்றது. தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியின் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு. பழனி இராகுலதாசன் சிறப்புரை ஆற்றினார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான சுவாமிகள் அனைவர்க்கும் ஆசி வழங்கினார்கள். முதல்வர் பா. செல்லப்பா தலைமை ஏற்றார். முனைவர் கே. கண்ணாத்தாள் வரவேற்புரை நிகழ்த்தினார். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றி கூறினார்.

22.08.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் காப்பியக் கவிஞர் நா. மீனவன் திருநாவுக்கரசர் பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

19.09.2015 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் நான்காம் ஆண்டு குருபூஜை விழாவை முன்னிட்டுச் சொற்பொழிவு அரங்கம் நிகழ்ச்சி நடைபெற்றது. தவத்திரு ஊரன் அடிகள் தலைமையில் நடந்த நிகழ்ச்சியில் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்தார்கள். முதுபெரும் தமிழறிஞர் முனைவர் தமிழ்ண்ணல் பாராட்டுரையும் சிறப்புரையும் வழங்கினார். இந்திய நடுவண் அரசின் சாகித்ய அகாடமியின் பால புரஸ்கார் விருதுபெற்ற குழந்தைக் கவிஞர் திரு. செல்லக் கணபதிக்கும் பாராட்டுச் செய்யப்பெற்றது. வாழ்வியல் விஞ்ஞானம் என்னும் நூலின் 2,3,4ஆம் பாகங்கள் வெளியிடப் பெற்றன. தவத்திரு ஊரன் அடிகள் நூல்களை வெளியிட டாக்டர் AT. தியாகராஜன் பெற்றுக் கொண்டார். காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். டாக்டர் சே. குமரப்பன் நன்றி கூற விழா நிறைவடைந்தது. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கே. கண்ணாத்தாள் நிகழ்ச்சியினைத் தொகுத்து வழங்கினார்.

20.09.2015 அன்று காரைக்குடி. திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தாரின் "திருவாசகம் முற்றோதல்" நிகழ்ச்சி நடைபெற்றது. 21.09.2015 அன்று குருபூஜை விழா இனிதே நிகழ்ந்தது. கைவல்ய நவநீதம் முற்றோதல் நடைபெற்றது. ஏராளமான அன்பர்கள் கலந்து கொண்டனர். தொடர்ந்து மகேஸ்வரபூஜை. அன்னம் பாலித்தல் நடைபெற்றது.

25.09.2015 அன்று நிறுவனர் நாள் விழா நிகழ்ந்தது. முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு. நன்மாறன், திரு. மனோகரன் நடராஜன், அரசு கவின் கலைக் கல்லூரியின் முன்னாள் முதல்வர் அல்போன்ஸா ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். நிறுவனர் நாள் விழாவையொட்டி நடைபெற்ற பள்ளி, கல்லூரி மாணவர்களுக் கிடையிலான பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றோருக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் திரு. மாயாண்டி வரவேற்புரை நிகழ்த்தினார். நர்சரி பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி. மணிமொழி நன்றி கூறினார்.

26.09.2015 அன்று நடைபெற்ற விழா நிகழ்ச்சியில் கோவிலூர் சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசிவழங்கினார்கள். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் முனைவர் K. பாஸ்கரன் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில் குற்றாலம் பராசக்தி கல்லூரியின் மேனாள் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் இராம. சௌந்தரவல்லி சிறப்புச் சொற்பொழிவாற்றினார். கலைக் கல்லூரியின் முதல்வர் முனைவர் பா. செல்லப்பா வரவேற்புரை நிகழ்த்தினார். மெட்ரிக் மேனிலைப் பள்ளியின் துணைமுதல்வர் திருமதி. வள்ளியம்மை நன்றி கூறினார்.

16.08.2015 அன்று இரண்டாவது பட்டம் ஸ்ரீமத் துறவு ஆண்டவர் குருபூஜையும், 29.08.2015 அன்று வெங்கடாசலம் ஐயா குருபூஜையும் 30.08.2015 அன்று மதுரை குட்டையா சுவாமி குருபூஜையும் 21.09.2015 அன்று ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜையும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### IV/02/14/ தாமன் வியாளன் கடன் கதை :

( முற்குறிப்பு : முற்பிறப்பின் பழம் பதிவுகள் வாசனை ஆகும். முன் வாசனையானது தற்பிறப்பில் துன்ப காரணமாகிறது என முன்னர்க் கண்டோம். ஆனால், முற்பிறவி ஏதுமற்ற முதல் பிறப்பாளரும் கூட, தற்பிறப்பிலேயே வாசனை வயப்பட்டு, துன்பமடையலாம் என இக்கதை வலியுறுத்துகிறது.

இக்கதைப் பெயர், மூன்று அசுரர்களின் பெயராகும். தாமன் = கயிறு, வியாளன் = மலைப்பாம்பு, கடன் = பாய் மறைப்பு)

**கதைப்பகுதி :**

இந்திரனையும் தேவர்களையும் வெற்றி கொண்ட ஒரு தானவன் இருந்தான். அவன் பெயர் சம்பரன். அவனுக்கு மாய வேலைகள் செய்யும் ஆற்றல் உண்டு. தேவர்களைத் துன்புறுத்துவதில் அவன் மிகுந்த விருப்பம் கொண்டிருந்தான். ஒருபோது, அவன், இந்திர பட்டணத்தையே தீயிட்டு எரித்தான். இதனால், தேவர்கள் ஓடி ஒளிய நேர்ந்தது.

நெடுங்காலம் கழிந்த பிறகு, சம்பரன் அவனது நாட்டில் இல்லாததை அறிந்த தேவர்கள், அங்கு சென்று சண்டையிட்டு அசுரர்களை வென்றனர். நாடு திரும்பிய சம்பரன் இதனை அறிந்து கோபமுற்றான். தேவருடன் போரிடுவதற்கெனப் பல அசுரர்கள் சென்றனர். ஆனால், தேவர்களே வென்றனர்.

வெகுண்டுபோன சம்பரன், அவனது மாயையால், தாமன், வியாளன், கடன் எனும் அசுரர்களை உண்டாக்கினான். முதல் பிறப்பாக உண்டாக்கப்பட்ட அசுரர் மூவரும் அச்சம், அபிமானம் ஏதுமின்றி, நன்கு போர்புரிந்ததால், தேவர்களால் தாக்குப் பிடிக்க இயவில்லை.

தேவர்கள், நான்முகனைச் சரணடைந்து, அசுரரை வெல்லும் வழி கேட்டனர். அசுரர்களுக்கு வாசனையை உண்டாக்கும் உபாயத்தை நான்முகன் கூறினார்.

"............ சுரர் பொருது உடைந்து போகிப்
பேர்த்தும் வந்து அமர் செய்து ஓடிப் பின்னும் வந்து அதனைச் செய்தார்"

(பொருது, உடைந்து = சண்டையிட்டும், சிதறி ஓடியும், பேர்த்தும் = மறுபடி)

இவ்வாறே நீண்டநாள் தொடர்ந்தனர். சிறு சிறு போர்களில் வெற்றியடைந்த அசுரர்களுக்கு அகங்காரம் உண்டாயிற்று. ஆனால் விட்டு விட்டுப் போர்புரிய வேண்டியிருந்ததால் அசுரர்கள் கோபவயப்பட்டனர். அடுத்த போர் எப்போது வருமோ எனும் நினைவால் அவர்கள் அபிமானமுற்றனர். இதனால் வாசனை உண்டாயிற்று. அசுரர்கள்,

"பயம் வந்து பிடித்துக்கொள்ளப் படர்தரு மோகம் கட்ட
அயர்வுறும் ஆசாபாசத்து அழுந்தி ......"

"வலியெலாம் இழந்து முன்னே வந்துஒரு பெயர் நின்றாலும்
நலிவுறமாட்டாராகி நடுங்கினர் ......"

ஒலிதர உரைத்துஎன் அஞ்சி ஓடினார் பொன்றிப் போனார்.

(கட்ட : பிணைக்க, ஒலிதர = மிகுதியாக, பொன்றி = தோற்று)

இவ்வாறு, தாமன், வியாளன், கடன் எனும் மூன்று அசுரரும் தோற்றுப்போனதன் நீதியை விடடு நீங்கி, வீமன், பாசன், திடன் எனும் அசுரர்கள் சார்ந்த நெறியை மேவி, துன்பம் தீர்வாயாக என வசிட்டர், இராகவருக்குக் கூறினார்.

தத்துவப் பகுதி :

பழம் பிறப்பால் மட்டுமின்றி, தற்பிறப்பிலேயே வாசனை உண்டாதல் கூடும். வாசனையை நீக்குதல் எளிதல்ல. ஆனால் மனமாசு நீக்கம் எனும் விவேகத்தைப் பெற்றால், வாசனை நீங்கும். பிரம்மத்தை உணர, வாசனை நீக்கம் தேவை என முன்னர்க் கண்டோம். உள்ளது ஒன்று மட்டுமே எனப்படும் அறிவுமயப் பூரணப் பிரம்மத்தில் மாசு மற்றும் வாசனையுடைய அசுரர்கள் தோன்றுதல் கூடுமா என இராகவர் கேட்டார். அதற்கான வசிட்டரின் மறுமொழியும் இங்கு தரப்படுகிறது.

**தற்பிறப்பில் முதல் வாசனை :**

இதுவரை வாசனையே இல்லாதிருந்தும், அது, எவ்வாறு தொடங்கும் என்பதற்கு வழியாக,

“நிலை பெறும்படி நான் எனும் வாதனை நின்றால்
வலை புகுந்த புள்ளாமென மூவரும் மடிவர்”, எனவும்,

“தொன்று தொட்டு நீர் தொந்திக்கின் வாசனை தொடர்ந்து
நின்ற கண்ணாடி நிழல்என மனதிலே நிற்கும்.”

“வேட்கையாலே, தீதிலோர் அநேகங்கற்றோர் தீரர் எனினும் கட்டுண்பார்” எனப்படுகிறது.

**மனமாசு நீக்கம் :**

தூய மனத்தால் சித்த சுத்தி பெறுகிறோம். சித்த சுத்தி பெற்றவர் போற்றுதற்குரியவர். இங்கு, மன மாசு நீக்கமே விவேகம் எனப்படுகிறது.

“துனிமனச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகையை
வெல்லிற்
பனிபாடு பதுமக்கான்போல் படர்ந்த வாதனை மாளும்.”

“செயல்களில் செல்லும் என்றே தெளிந்து பல்போகம் துய்த்தால்
துயர்செயாது, அறிந்து சேர்ந்தால் சோரரும் தோழராவர்.”

“மெய்த்திறம் பற்றி நீயாம் அதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திட மனதினோடே புசித்தவை பந்தமாகா.”

“மாமனம் விவேகத்தை வரம்பறப் பழகிவிட்டால்
பாமரப் பிறவித் துன்பம் பற்றாது ...
மந்திரி எனலாம் உண்மை மருவுறும் விசாரத்தாலே
இந்திரியங்கள் என்னும் இடர்ப்பகை அறுத்தலாலே
தந்திரி எனலாம் இட்டம் சமைத்தலால் ஏவலாளாம்
நொந்து இரிகிலா உள்ளம் நோக்கிய விவேகத்தோர்க்கே”

(பதுமக்கான் = தாமரைகள், புசித்தவை = அனுபவித்தவை, இரிகிலா = கெடாத)

இரட்டைகளற்ற பிரம்மத்தில் அசுரர் தோற்றம் எவ்வாறு :
மாய வல்லமையால், தாமன் வியாளன் கடன் தோன்றினர்
என முன்னரே கூறப்பட்டது. இராகவருக்கு மறுமொழியாக,

**"துனையுறு தாமன்முன்னோர் தோற்றமாத்திர மெய்யானோர்,"**

**"மதியினான் எனலும் பொய்யே மதியினீஎனலும் பொய்யே எதிர்குரல் தாமன் முன்னாம் அவர்கள் உண்டெனலும் பொய்யே."**

**"வரத்துறும் அவரும் நாமும் வாய்மையே எங்குமில்லை."**

**"செறிபொருட்சத்தி தோற்றமாத்திரம் சகமாய் நிற்கும்"**

**"பொறிகள் பல்காட்சி பொய்யே பொருள்மெய்யே என்றுவாழ்வாய்"**
எனவெல்லாம் வசிட்டர் கூறி முடித்தார்.

பிற்குறிப்பு : மிகுந்த ஆற்றலுடையவருமே, விவேகமற்றுப் போனால், வாசனையைப் பற்றிக்கொள்வார். இது, காலப்போக்கில் பாசம், ஆசை அகங்காரம், அச்சம், அபிமானம் எனத்தொடரும். இவை மன மாசுகளாகும். மன மாசுகளை நீக்குபவர் விவேகியாவார். மூன்று அசுரர்களின் பெயர்களும், விவேகம் பெற இயலாதவர்கள் எனப் பொருள்படும்.

இதற்கு அடுத்த கதையில், வேறு வகையான மூன்று அசுரர்களுடன், இதே சம்பராசுரன் வருவார்.

*(தொடரும்....)*



# நன்றிநவிலல்

**பேராசிரியர்: அ.ச. ஞானசம்பந்தன்**

போற்றுதலுக்குரிய தெய்வத்திரு அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் தன்னுடைய பயன்பாட்டிற்காகவும், மேற்கோள்களுக்காவும் வைத்திருந்த ஏறக்குறைய ஐநூறு அரிய தமிழ் நூல்களை நம்முடைய நூலகப் பயன்பாட்டிற்காக முதுபெரும் பேராசிரியர் இலக்கிய ஞானி அ.ச. ஞானசம்பந்தம் அவர்களின் புதல்வர் மெய்கண்டான் மற்றும் புதல்வி மீரா இருவரும் மனமுவந்து வழங்கியுள்ளார்கள். அந்நூல்களை தனியா "பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் கொடையாக அளித்த" நூல்கள் என்று குறிப்பிட்டு வைத்துள்ளோம்.

நாம் அவர்களுக்கும் அன்புச் செல்வி, பங்கயச் செல்வி, சிவகாம சுந்தரி ஆகியோருக்கும் கோவிலூர் மடாலயம் சார்பாகவும், கோவிலூர் ஆண்டவர் நூலகத்தின் சார்பாகவும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**பேராசிரியர் : இ. சுந்தரமூர்த்தி**

தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தரும், சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவரும், மொழிப்புலத் தலைவரும், பதிப்புத்துறைப் பொறுப்பாளருமான பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் தன்னுடைய பயன்பாட்டிற்காக வைத்திருந்த 4000 அரிய நூல்களை நம்முடைய கோவிலூர் ஆண்டவர் நூலகத்திற்கு மனமுவந்து அளித்துள்ளார்கள். பெரும்பான்மையான நூல்கள் நம்முடைய பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குப் பயன் தரக்கூடியவையாக உள்ளன. அதனால் நம்முடைய நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி நூலகத்திற்கும், கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி நூலகத்திற்கும் பகிர்ந்து அளிக்கப்பட்டுள்ளன. பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்களின் கொடை உள்ளத்திற்குக் கோவிலூர் மடாடலயம் சார்பாகவும், கல்வி நிறுவனங்களின் சார்பாகவும், கோவிலூர் ஆண்டவர் நூலகத்தின் சார்பாகவும் நம்முடைய நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

**"செய்ய தெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல்"**

**"ஐயன்வந்துஇங்கு என்உள்ளம் புகுந்துகோயில் கொண்டனன்**
**ஐயன்வந்துஇங்கு என்உள்ளம் புகுந்துகோயில் கொண்டபின**
**வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்பது இல்லையே"**

பரம்பொருளை நேரில் கண்டபின் பேச்சுக்கு வேலையில்லை என்பதே இதன் உட்பொருள். நெஞ்சமே ஆலயம்; அதுதான் ஆண்டவனின் கருவறை. திருமூலர் கூற்றும் அதுவே.

**"உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்பு ஆலயம்**
**வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"**

என்ற பாடலில் புலன்களை விளக்காக உருவகிப்பார் திருமூலர். சிவவாக்கியரும் ஒத்த கருத்தினாரே.

கற்சிலைகளுக்கும், செப்புச் சிலைகளுக்கும் ஆடம்பரமான வழிபாடுகள் நடத்துவது தேவை அற்றது என்பது சித்தர்கள் கருத்து. பெருங்கோயில்களைக் கட்டிச் செங்கல்லையும், மணலையும் கொண்டு கோயில் கட்டி வீணாக்குவதை அறவே வெறுக்கின்றனர் சித்தர்கள். நான் யார் ? என்ற தேடல் ஞானியாகலாம் என்பது பகவான் இரமணரின் கருத்தாகும். அதனால் தான்,

**"கோயிலாவது ஏதடா ? குளங்கள்ஆவது ஏதடா ?**
**கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே !**
**கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே**
**ஆனதும் அழிவதுவும் இல்லைஇல்லை இல்லையே"**

என்று பேசுகிறார் சிவவாக்கியர்.

பொதுவாகச் சித்தர்கள் சாதி வேற்றுமை பாராட்டுவதை வெறுப்பவர்கள். இந்த மேனி ஐம்பூதக் கலவைகளால் ஆனது; நம்

உடலிலே முக்கால்பகுதி நீர் உள்ளது. மூலக் கனலும் உள்ளது. காற்றும் உள்ளது; தலை உச்சி ஆகாயம் எனப்படுகிறது. பாதம் பூமி என்று சொல்லப்படுகிறது. இந்த ஐம்பூதங்களும் பேருருக் கொண்டால் உலகில் எதுவும் மிஞ்சாது. அவ்வாறு ஐந்தும் ஒன்றாக எழுங்காலம் ஊழிக்காலம்; இறுதி வருங்காலம், இவ்வுடல் எரியாலோ, மண்ணாலோ அழிக்கப்படும். சாதி பார்த்தா உடலைத் தீயும் நீரும் அழிக்கின்றது ? எந்தச் சாதியில் பிறந்த பெண்களாயினும் அவர்கள் பால் அனுபவிக்கும் இன்பமும் வேறாக இருக்குமோ ? எச்சாதிப் பெண் நகை அணிந்தாலும் அதனிடம் வேறுபாடுண்டோ? என்று சாதிப் புரட்சியை அன்றே உண்டாக்கித் தீமையை வெறுத்தவர்கள் சித்தர்கள்.

**"சாதிஆவது ஏதடா ? சலம்திரண்ட நீர்எலாம்**
**பூதவாசல் ஒன்றலோ ? பூதம்ஐந்தும் ஒன்றலோ ?**
**காதில்வாளி காரைகம்பி பாடலம்பொன் ஒன்றலோ ?"**

**"செய்யதெங்கிலே இளநீர் சேர்ந்தகா ரணங்கள்போல்**
**சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ ?"**

**"கறந்தபால் முலைப்புகா, கடைந்தவெண்ணெய் மோர்புகா**
**உடைந்துபோன சங்கின்ஓசை உயிர்களும் உடற்புகா**
**விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும்போய் மரம்புகா**
**இறந்தவர் பிறப்பதுஇல்லை இல்லை இல்லையே"**

இது சிவவாக்கியரின் சீரிய வாக்காகும்.

உலகிடைப் பிறக்கும் உயிர்களின் பிறப்பு நிலையை உணர்த்தும் சிவவாக்கியர் ஆண்களின் சுக்கில நீரும், பெண்களின் உதிரமும் சேர்கையில் உண்டாகும் பிறப்பின் தோற்றம் பற்றி வெளிப்படையாகவே பேசுகிறார். நாட்டுப்புற மக்களிடையே திட்டுவதற்கென்றே கொச்சையாகப் பேசும் பேச்சு வழக்குச் சொற்களையே கையாள்கிறார். அனைத்துச் சித்தர்களிடமும் இத்தகைய அமைப்பினைக் காணலாம். மகத்துவமான மனிதப் பிறவிகள்

அசுத்தத்தில் இருந்துதான் தோன்றுகின்றன என்பதைப் பட்டினத்தார் போன்றவர்களும் பாடியுள்ளனர். எடுத்துக்காட்டாக ஒரு பாடல் மட்டும் காட்டப் பெறுகின்றது. பாடலின் விளக்கம் நம்மால் உணரத்தக்கதே.

**"சொற்குருக்கள் ஆனதும் சோதிமேனி ஆனதும்**
**மெய்க்குருக்கள் ஆனதும் வேணபூசை செய்வதும்**
**சற்குருக்கள் ஆனதும் சாத்திரங்கள் சொன்னதும்**
**செய்க்குருக்கள் ஆனதும் திரண்டுருண்ட தூமையே"**

இப்படி ஆபாசக்கலவையால் தோன்றிய உடம்பு, வாழ்கின்ற போதே நன்னெறியை நாடுதல் அவசியம் என்று வலியுறுத்துகின்றனர். சித்தர்கள் வீட்டுலக வாழ்வை விரும்பியவர்களாக இருந்தனர். அனேகமாக அனைத்துச் சித்தர்களிடமும் இத்தகைய தாக்கம் இருக்கின்றது. செல்வங்களையோ அல்லது வேறு விதமான இச்சைகளையோ விரும்பாது முப்பொழுதும் அவனையே சேவித்து உலக மாந்தர்களுக்கு இயன்றவரை உதவுதலையும் வீட்டுலக வாழ்வை விரும்பியுமே வேண்டிச் சிவனைச் சேவித்தனர் பெரியோர். பெரியபுராணம் பாடிய சேக்கிழாரும்

**"கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி**
**வீடும் வேண்டா விறலினர்"** என்று குறிப்பிட்டார்.

*(தொடரும்....)*

## அஞ்சலி

நம் வாழ்நாளில் கண்ணெதிரே கண்ட ஜீவன்முக்தர், ஞானி, பூஜ்யஸ்ரீ தயானந்த சரஸ்வதி சுவாமி அவர்கள் கடந்த செப்டம்பர் 13ஆம் நாள் மகா சமாதி அடைந்து பிரம்மத்தோடு ஐக்கியமானார்கள்.

பூஜ்யஸ்ரீ தயானந்த சரஸ்வதி சுவாமி அவர்கள் உலகம் போற்றும் தத்துவஞானி ஆயிரக் கணக்கான துறவிகளை உருவாக்கிய ஆன்மிக மகான். உலகமெங்கும் அவருடைய சீடர்கள் நன்னெறியைப் பரப்பி வருகின்றார்கள். தன்னுடைய எளிய ஆனால் கருத்தாழமிக்க

பேருரைகளாலே பாமர மக்களையும் ஆன்மீக நெறியிலே திருப்பியவர்கள். உலகமெங்கும் தன்னுடைய உடல் நலிவையும் கருதாது மக்களுக்குத் தத்துவக் கருத்துக்களைத் தெளிவாக உரைத்து வேதாந்தத் தத்துவத்தை உலகமெங்கும் பரப்பிய வேதாந்தச் செம்மல் சுவாமி அவர்கள். ஆன்மீகப் பணியோடு, சமுதாயப் பணியும் சிறக்கச் செய்தவர்கள். அகில இந்திய சேவா இயக்கத்தை (All Indian Missiion for Seva) தொடங்கிக் குக்கிராமங்களிலும் விடுதிகள் நிறுவி 300க்கு மேற்பட்ட ஏழை மாணவர்கள் கல்வி கற்கவும், மேன்மையடையவும் உதவுகின்றது. இந்த இயக்கம் அவர்களுடைய ஆன்மீக, சமுதாயப் பணிகள் அனைத்தையும் பின் வரும் ஆஸ்ரம நிர்வாகிகள் தொடர்ந்து செய்து மக்களுக்குத் தொண்டாற்றுவார்களாக.

நம்முடைய மடாயலயத்துடனும், சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகளுடனும் நம்மிடம் நெருங்கிய உறவும், பாசமும் கொண்டவர்கள் அவர்களுடைய அருளாசியினாலும், ரிஷிகேஷ் அர்ஷவித்யா பீடம் நிர்வாக அறங்காவலர் பூஜ்யஸ்ரீ சுத்தானந்த சரஸ்வதி சுவாமி அவர்களின் வழிகாட்டலாலும், ஒத்துழைப்பாலும் நம்முடைய ரிஷிகேஷ் வேதாந்த மடம் நிறுவி இன்று வரை செம்மையோடும், புகழோடும் செயல்பட்டு வருகிறது. நாம் தயானந் சரஸ்வதி சுவாமிகளுக்கும், ஆஸ்ரம நிர்வாகிகள், உறுப்பினர் அனைவருக்கும் நம் நன்றியதலைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம். இரு ஆஸ்ரமங்களின் உறவு மேலும் வலுப்பட்டு வளரும் என்பதில் எந்த ஐயமும் இல்லை. நம்முடைய மடாலயம் என்றும் தயானந்த சரஸ்வதியினுடைய ஆஸ்ரமத்திற்கு ஒத்துழைப்பையும், ஆதரவையும் நல்கும்.

தெய்வத்திரு தயானந்த சுவாமி அவர்களுடைய ஆன்மா பூரணமாக பிரம்ம ஐக்கியமாக நம் ஆதிகுருமுதல்வர் கோவில் ஆண்டவர் திருவடி சிந்தித்துப் பிரார்த்தனை செய்துகொள்கிறோம்.

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (சுவேதராசப் படலம்)

முன்ஒரு காலத்து மூரி நீர்உல(கு)
இன்னல்தீர்த்(து) அளிப்பவன் சுவேதன் என்பவன்
அன்னவன் புத்திரன் ஆன்ற கல்வியான்
மன்உயிர் தன்உயிர் எனக்கொள் மாண்பினான் 1

எதிர்ந்தவர் மணிமுடி இடறும் தாளினான்
பிதிர்ந்திடா(து) அறநெறிபிறக்கும் சீர்த்தியான்
அதிர்ந்திடா நுண்மதி அமைச்சர் ஆதிநூல்
முதிர்ந்தவர் சூழ்தர வாழும் மொய்ம்பினான் 2

பெற்றவற்(கு) உரிஇயற் பெயர்எ ழுத்தினுள்
உற்றவா முதலொ(டு)ஈ(று) உள்ள வா(று)உற
மற்(று)அவை களில்உடல் மாறி வைத்(து)அரில்
அற்றவர் சுவேதன்என்(று) அறையும் பேரினான் 3

அன்னவன் அராமுடி அமர்ந்த பூமகள்
தன்ஒரு குடைநிழல் தங்க எத்தகு
பன்னரும் போகமும் நுகர்ந்து பண்புசால்
மன்னுநல் நீதியின் மகிழ்ந்து வாழுநாள் 4

ஒருதினம் கணிதநூல் உணர்ந்(து) உளார்சிலர்
கருதுசா தகமடல் கைக்கொண்(டு) ஓர்ந்தனர்
பொருவடி வேலநின் புணரும் ஆயுள்நாள்
வெருவரும் அற்பமே மேயது என்றனர் 5

சொற்றது கேட்டலும் துணுக்(கு)உற்(று) அஞ்சியே
கற்றவர் முதலிய கடும்பு சூழ்தரப்
பொன்தட மணிமுடி புதல்வற் சூட்டுபு
மல்தடம் புயத்தவன் வனத்தை நண்ணினான் 6

தண்டக வனத்தினைச் சார்ந்து நாள்தொறும்
எண்தரு பெருந்தவம் இயற்றி வைகினான்
அண்டரும் பெறல்அரும் அனைய பேற்றினான்
ஒண்தனிச் சத்திய உலகம் நண்ணினான் 7

மலரவன் உல(கு)இடை மன்னி வைகியும்
உலவரும் தெய்வத உருவம் பெற்றும்வெப்(பு)
அலர்பசி அவனைவிட்(டு) அகன்ற(து) இல்லையால்
உலர்தல்இல் வினைப்பயன் ஒழிக்க லாம்கொலோ 8

பிறைமுடிப் பெருந்தகை நுதல்பி றங்குதீ
அறைதரும் அவன்வயிற்(று) அகம்பு குந்(து)உலாய்க்
குறைதல்இல் சினங்கொடு கொளுத்தி னால்என
நிறைபசித் தழல்எழ நெடிது வாடுவான் 9

ஒருபகல் மிகுபசி உடன்று பொங்கலால்
வெருவரு பதைப்பொடு விழுந்து சாம்புவான்
மருமலர்க் கிழவனை வணங்கி ஐயயான்
பருவரும் கொடுமையைப் பகரக் கேள்என்றான் 10

அருந்தவம் இயற்றிநின் உலகம் அண்மியும்
பொருந்தல்இல் தெய்வத உருவம் பூண்டும்யான்
வருந்தஇப் பசிப்பிணி வருத்தல் என்னைகொல்
இருந்தமற்(று) இஃ(து)இறும் பூது தேரினே 11

மன்னவன் இவ்வணம் வருந்திக் கூறலும்
அன்னமென் நடைக்கலை அணங்கு மேவுநா
முன்னவன் முன்நிகழ்(வு) அனைத்தும் உன்னினான்
துன்னரும் வினைப்பயன் எடுத்துச் சொல்லுவான் 12

மண்ணில்வித் தா(து)அது முளைத்த மாண்பிலை
அண்ணலே நீஉல(கு) ஆண்ட நாட்களில்
எண்ணுமா மறையவர்க்(கு) அன்னம் ஈந்திலை
வண்மைசேர் அஃ(து)இலா வாழ்வும் வாழ்க்கையோ 13

தண்டக வனத்(து)இடைத் தங்கு நாளினும்
கொண்ட நின்உடம்பையே குறித்துப் போற்றினை
ஒண்தவ வலியில்என் உலகம் உற்றனை
கண்டதீ வினைஇப் பசியும் கைக்கொண்டாய் 14

உரைசெய்எவ் வனத்துநீ உடம்பு விட்டனை
வரைசெய்தோள் அண்ணலே மற்றை அவ்உடல்
விரைசெய்அவ் வனத்(து)அகம் மேவு கின்றது
புரைசெய்மற்(று) அதைப்புசி போதிஎன்றனன் 15

என்றலும் துயர்அளைந்(து) எழுந்து பேர்ஒளி
குன்றரும் விமானம்மீக் கொண்(டு)அ ரம்பையர்
நின்(று)அரும் சாமரை இரட்ட நீள்முடி
வென்றபொன் குழைமுதல் அணிகண் மின்னவே 16

அலங்கும்அக் கானகத்(து) அயல்அ டைந்தனன்
இலங்கும்அவ் விமானம்நின்(று) போந்துநாய்க்
குலம்கவர் உடம்(பு)உறுப்(பு) அரிந்து கொண்(டு)எடுத்(து)
உலங்கவர் தோளினான் உண்டிட் டான்அரோ 17

உண்டபின் கதிரவன் ஒக்கும் மானம்மேல்
கொண்டனன் சத்திய உலகம் கூடினான்
மண்டுவெம் பசிப்பிணி வந்த போதுஎலாம்
தண்டுநேர் புயத்தவன் சார்ந்துசார்ந்(து) உண்பான் 18

முரசுகண் படல்இலா வாயில் மொய்ம்(பு)உடை
அரசும்அக் கான்அடைந்(து) அடைந்(து)அ ருந்தவும்
விரசும்அப் பிரேதம்மேன் மேலும் வீங்கிற்றால்
பரசுநல் அறன்இலார் பாவம் போலவே 19

அருவருப்(பு) அழம்வளர்ந்(து) அமரு நாள்இடைப்
பொருவரும் அத்தகு வனம்பொ ருந்திவாழ்
வெருவரு தண்டகன் வெய்ய தீமைதீர்
பிருகுவின் கன்னியைப் பெட்டு நோக்கினான் 20

(தொடரும்....)

## கண்ணப்ப நாயனார் (தொடர்ச்சி)

## (நற்கதை நம்பி அய்க்கண்)

இந்நிலையில் வேடர்தலைவன் நாகன், வேட்டையாடி, நிரை கவர்ந்து நாட்டினைக் காக்கும் பணியில் மூப்புப் பருவம் எய்தி இளைத்தான். அதனால், சுற்றிலும் உள்ள காட்டில் பன்றி, புலி, கரடி, காட்டு மான், மான் முதலிய விலங்குகள் பெருகிவிட்டன. 'மாதம் தோறும் மன்னன் வேட்டையாடும் பழக்கம் குறைந்துவிட்டது' என்று கவலைப்பட்ட வேடுவர்கள், தலைவனிடம் சென்று வணங்கிச் சொன்னார்கள். அவர்களிடம் 'எனக்கு மூப்பு ஏற்பட்டு விட்டதால், முன்பு போல் வேட்டையாட முடியவில்லை. என் மகனை உங்கள் தலைவனாக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று தெரிவித்தான் நாகன். இது கேட்டதும்,

'அன்னவரும் இரங்கிப் பின் மகிழ்ந்து தங்கோன்
அடி வணங்கி இம்மாற்றம் அறைகின்றார்கள்.'

என்று பாடுகிறார் சேக்கிழார். நாகன், தன் ஓய்வை அறிவித்தவுடன் அதை மகிழ்ச்சியோடு ஏற்காமல், இரங்கிப் பின்னரே திண்ணனின் தலைமைக்காக மகிழ்ந்தார்கள் என்று காட்டில் வாழும் வேடர்களிடமும் உள்ள நனி நாகரிக அரசியல் பண்பாட்டைப் புலப்படுத்துகிறார் 'உத்தம சோழப் பல்லவன்' ஆகிய முதலமைச்சர் சேக்கிழார்.

'இத்தனை காலமும் நினது தலைமையின் கீழ்த் தங்கி இனிது உண்டு தீங்கின்றி இருந்தோம். உன் மரபிற்கேற்ற வீரனாய்த் திண்ணனைப் பெற்றளித்துள்ளாய். அவனை அழைத்து மலை நாட்டின் ஆட்சிப் பொறுப்பை அருள்க' என்று குடிமக்கள் வேண்டினார்கள். அவ்வாறே திண்ணனைக் கூட்டி வரப்பணித்துவிட்டு, அவனுடைய கன்னி வேட்டைக்கு முன்னர்க் காட்டுத் தெய்வங்களுக்குப் பலியிட்டு வழிபாடு செய்ய, மூத்த தேவராட்டியை அழைத்து வர ஆளனுப்பினான் நாகன். தளிர் நிறைந்த கொண்டை மாலையைச் சூடி, மான் கொம்பில் செய்த குண்டலத்தைக் காதில் அணிந்து, கத்தூரித் திலகமிட்டு, மயிற்பீலிகோத்த சங்கு மாலையை வடமாய்க் கட்டி, மரவுரி அணிந்த தேவராட்டி வந்து, அரசன் முன் நின்று அட்சதை தூவி வாழ்த்தினாள்.

அவளிடம், மன்னன் "அன்னையே! வறுமை இல்லாமல், நன்றாக இருக்கின்றாயா?" என்று நலம் விசாரித்தான். வேட்டுவ அரசனாக இருந்தாலும் தன் குடிமக்களிடம் நலம் உசாவும் அன்புக்காட்சி கம்பரின் தமிழ் இராமன், தெருவில் போகும்போது எதிரே காண்பவர்களிடம்,

'எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்,
முதிர் தருகருணையின் முகமலர் ஒளிரா,
எதுவினை? இடர் இலை? இனிதின் நும் மனையும்
மதி தரு குமரரும் வலியர்கொல்?' எனவே(திரு அவதாரப் படலம் : 135) என்று கேட்டு நலம் விசாரித்த அன்பினை நினைவூட்டுகிறது.

"அரசே! நீ ஏற்பாடு செய்து வைத்தபடி, எனக்கு உணவு, உடை எல்லாம் நிறையக் கிடைத்து வருகின்றன. எனக்கு ஒரு குறையும் இல்லை. என்னை அழைத்த காரணம் யாது?" என்று கேட்டாள் தேவராட்டி.

"என் மைந்தன் திண்ணன், எங்கள் குலத் தலைமை ஏற்று, மக்களைக் காக்கும் ஆட்சியுரிமை பெறுகின்றான். என்னை விட, அவனுக்கு வேட்டை அதிகமாக வாய்த்து, பிற நாடுகளை வெல்லும் வெற்றியும் பெறுமாறு காட்டில் உள்ள தெய்வங்களுக்குப் பலியும் பூசனையும் செய்க..." என்று கட்டளையிட்டான் நாகன்.

"நான் இங்கே வரும்போதே, நிறைய நன்னிமித்தங்கள் தோன்றியதைக் கண்டேன். உன் மகன் உன்னிலும் மேம்பட்டவனாய்த் திகழ்வான்" என்று அறிவித்து, பூசனைக்கான பொருள்களை வாங்கிக்கொண்டு சென்றாள் தெய்வ மூதாட்டி.

தன்முன் வந்து நின்ற திண்ணனிடம் நாகன் "மூப்பு வந்தெய்தியதால், என்னால் முன்பு போல் வேட்டையாட இயலவில்லை. எனவே நீ எனக்கு மேலாய், வேடங்களைத் தாங்கும் காவலை மேற்கொண்டு பகைவரை வென்று, வேட்டையாடி உன் உரிமையை ஏற்றுக் கொள்வாய்" என்று கூறி, ஆட்சியுரிமைக்குரிய உடைவாளையும் கேடயத்தையும் வழங்கினான். தந்தையை வணங்கி அவன் தந்த உரிமைப் பொருள்களைப் பணிவுடன் வாங்கிக் கொண்டு,

‘சிந்தை பரம்கொள நின்ற திண்ணன்’

என்கின்றார் சேக்கிழார்.

‘அரசாட்சி உரிமையை ஏற்றுக்கொள்ளும் போதே, அவனுடைய சிந்தையைப் பரம்பொருளாகிய சிவன் கொள்கின்றான்’ என்று உணர்த்துகிறார் சேக்கிழார்.

‘அவன் அருளாலே அவன் தாள் வணங்கி’ என்ற மணிவாசகப் பெருமானின் கருத்தின் வண்ணமே, திண்ணனும் அரசுரிமையைச் சிவனருளாலே பெறுகின்றான் என்பது குறிப்பு.

“நம் குல மறவர்தம்மை நான் காத்ததற்கு மேலாக நீ காத்து வில்லாற்றலால் ஒப்பற்ற சிறப்பை அடைவாய். நல்ல வேட்டைகளும் தெய்வ அருளால் உனக்கு வாய்க்கும். நீ இப்போது வேடர் குல மக்களோடு வேட்டையாடப் புறப்படு...” என்று விடைகொடுத்து அனுப்பினான் நாகன்.

தந்தையை வணங்கி விடைபெற்று, சுனைநீரில் குளித்து இல்லம் சென்று தங்கி, வைகறைப் பொழுதில், படைக்கொட்டிலிலிருந்து வேட்டைக்குப் புறப்பட, பணியாட்கள் அவனுக்குக் கோலம் செய்யத் தொடங்கினார்கள்.

அவர்கள் திண்ணனின் தலை முதல் தொடங்கி, அடிவரை அணி செய்வதை நுட்பமாக விளக்குகிறார் சேக்கிழார். தெய்வங்களின் கோலத்தைக் கேசாதி பாதமும் மனிதர்களின் அணியைப் பாதாதி கேசமும் பாடிப் பாராட்டுவது இலக்கிய மரபு. இந்த அலங்காரத்திலேயே, திண்ணனுடைய தெய்வீக அம்சத்தைக் குறிப்பாகச் சுட்டியுள்ளார் கவிஞர்.

திண்ணனுக்குக் கேசாதிபாதம் அணிமணிகள் சூட்டுவதையே ஆறு பாடல்களில் விரிவாக வர்ணிக்கிறார் சேக்கிழார். தலைமயிர்ச்சுருள் சாய்ந்தும் நிமிர்ந்தும் பொலிய, கொண்டை மாலைக்கு நடுவே, முல்லை, குறிஞ்சி, வெட்சி மலர்களைக் கோத்து, பின்பக்கம் செருகி, முன்நெற்றியில் மயிற்பீலியுடன் அமைந்த குன்றிமணியைப் பொருத்தினார்கள். கழுத்தில் சங்குமணியும் பன்றிக் கொம்பும்

இணைந்த மாலை தொங்க, புலித்தோலை ஆடையாக இடுப்பில் கட்டி, மார்பில் தந்தத்தாலாகிய மணித்திரளை மாலைபோல் அணிவித்து, முன் கையில் விரலுறையை இறுகக்கட்டினார்கள். மயில் பீலியோடு இணைந்த இடுப்பின் புலித்தோலாடையில் உடைவாளை வாரினால் சேர்த்துப் பிணைத்து, வீரக்கழல் அணிந்த பாதங்களில் செருப்பை அணிந்ததும், வில்லை நாண்எறிந்து ஒலியெழுப்பினான் திண்ணன்.

சுற்றிலும் வாழ்த்தொலிகளும் துடியோசைகளும் ஒலிக்க, திண்ணன் புறப்பட்டபோது, காட்டில் தெய்வங்களுக்குப் பலியூட்டி வழிபாடு இயற்றித் திரும்பிய தேவராட்டி, அவன்முன் நின்று, தலையில் அட்சதை தூவி "உன் தந்தை தந்தைக்கும் வாய்க்காத பல நன்னிமித்தங்கள் உனக்கு அமைந்துள்ளன நின் வீரம், நம் அளவைக் கடந்தது" என்று வாழ்த்தினாள். அவளுக்கு உரிய சிறப்பைச் செய்து வணங்கிவிட்டு, திண்ணன் கையில் வில்லுடன் புறப்பட்டான்.

அவன்பின்னால் வேடுவர் கூட்டம் தொடர்ந்து நடந்தது. வலைகளை ஏந்திய வேடர்களும் வேட்டை நாய்களும் சுற்றிலும் நெருங்கி வந்தனர். காட்டிலே விலங்குகளைப் பிடிக்க வலைகளுடன் செல்லும் வீரர்கள் நெருங்கிப் பின் தொடர, பிறப்பு வலையை அறுக்கப் போகும் திண்ணன் செல்வதை,

'போர்வலைச் சிலைத் தொழில் புறத்திலே விளைப்ப, அச்
சார்வலைத் தொடக்கறுக்க ஏகும் ஐயர், தம்முனே
கார்வலைப் படுத்த குன்று கானமா வளைக்க நீள்
வார்வலைத் திறம்சுமந்து வந்த வெற்பர் முந்தினார்'

என்று கொலைத் தொழில் மேற்கொள்ளும் திண்ணனை, அந்தணராக உயர்த்துகின்றார் சேக்கிழார்.

விலங்குகளை வேட்டையாடும் நோக்கத்தோடு கூரிய பார்வை கொண்டு செல்லும் வேடுவரிடையே, சிவனாரைக் காணும் நீள்பார்வை கொண்ட திண்ணன் செல்கின்றான் என்ற குறிப்பை,

'தண்ணிலா அரும்பு கொன்றை தங்கு வேணியார் தமைக்
கண்ணில் நீடு பார்வையொன்று கொண்டு காணும் அன்பர் முன்
எண்ணில் பார்வை கொண்டு வேடர் எம்மருங்கும் ஏகினார்'

என்று பாடுகிறார் சேக்கிழார்.

கொட்டு முழக்கங்களோடு வேட்டுவர்கள், காட்டுக்குள் விலங்குகளின் கால்தடங்களைப் பின்பற்றிச் சென்றார்கள். விலங்குகள் கூடியுள்ள காட்டைச் சுற்றிலும் வேலி அமைத்தும் வலைகளைக் கட்டியும் பெரும்பரப்பை அடைத்த பின், திண்ணனின் தலைமையில், வில்லோடும் அம்புகளோடும், நாய்களைச் சுற்றிலும் விரட்டி, வேட்டைக்காட்டுக்குள் புகுந்தனர். துடிகளின் ஒலி எழுப்பியும் முழக்கம் செய்தும், விலங்குகளை எழுப்பி விரட்டி, வில்லால் எய்து, பன்றி, யானை, மான், புலி, காட்டெருமை முதலியவற்றை அம்புகளால் வீழ்த்தினார்கள். கால் ஒடிந்தும், தலை இழந்தும், இடை கூறுபட்டும், குடல் சரிந்தும், உடல் சிதைந்தும் விலங்குகள் வீழ்ந்தன.

திண்ணனின் குடிமக்கள், வேட்டையாடும் காட்சியை 9 பாடல்களில் விரிவாக வேட்டையை நேரில் கண்டவர் போல் சேக்கிழார் விளக்கமாகப் பாடும் திறனைப் பார்க்கிறோம். அத்தகைய கொடிய வேட்டையினும், வேடுவர்கள் இரக்கம் காட்டும் மனித நேயத்தோடு செயல்படும் காட்சியைக் காட்டுகிறார் சேக்கிழார்.

மூப்பால் தளர்வுற்று நகரும் விலங்குகளையும் சிறு குட்டிகளையும் கன்றுகளையும், கருவுற்ற பெண் விலங்குகளையும், அணையும் இணையரையும் வேட்டையாடாமல் விட்டுவிடுகிறார்கள் 'கொலைபுரி சிலை மறவோர்'....

இவ்வாறு பல முனைகளிலும் வேட்டை நடந்து கொண்டிருக்கும் போது, ஒரு பன்றி, சுற்றி நாட்டப்பட்டிருந்த வலையை அறுத்துக்கொண்டு வெளியே வேகமாக ஓடுவதைக் கண்டு, அதைத் தொடர்ந்து விரட்டிச்சென்ற வேடுவர்கள் எல்லோரும் இளைத்து நின்றுவிட, திண்ணனும், நாணன், காடன் என்ற இருவரும் இணைந்து நெடுந்தூரம் ஓடினார்கள். விரைவாக ஓடிய பன்றி, வேட்டைக்காட்டைவிட்டு வெகுதொலைவு ஓடி, களைத்துப்போய் ஓர் அடர்ந்த மரநிழலில் பதுங்கிக் கொண்டது. அதைக்கண்டு நெருங்கிச் சென்ற திண்ணன், உடைவாளை உருவி ஓங்கிக்குத்திப் பன்றியை இருகூறாக்கினான்.

இதைப்பார்த்த நாணன் காடனிடம் "இந்தப் பன்றியின் பின்னால் எவ்வளவு பேர் ஓடிவந்து இளைத்தோம். இறுதியில் ஆடவன் கொன்றான் அச்சோ!" என்று வியந்து திண்ணனின் ஆண்மையைப்

பாராட்டினான். 'இத்துணை வேடர்கூட்டத்திலும் இவன்தான் ஆண்பிள்ளை!' என்ற தனித்த பாராட்டை, கன்னி வேட்டையிலேயே உறுதி செய்து விட்டான் திண்ணன்.

காடன் "நெடுந்தூரம் ஓடி வந்ததால் களைத்துப் பசி வந்துவிட்டது. பன்றியைச் சமைத்து உண்டு, தண்ணீர் குடித்துவிட்டு, வேட்டைக் காட்டுக்குத் திரும்புவோம்" என்று சொன்னான்.

திண்ணன் "தண்ணீர் எங்கே உள்ளது?" என்று கேட்க, நாணன் "இந்த மலைக்கு அப்பால் பொன்முகலியாறு ஓடுகிறது" என்று தெரிவித்தான். "சரி, அங்கே போவோம். கொன்ற பன்றியை எடுத்து வாருங்கள்" என்று சொல்லிவிட்டு, திண்ணன் மலையை நோக்கி நடந்தான். அரைக்காவத தூரத்தில், சிவன் வைகும் அந்த மலையைக் கண்டான்.

"நாணா! இக்குன்றுக்குச் செல்வோம்..." என்று திண்ணன் சொன்னதும், "அங்கே சென்றால் நல்ல காட்சியைக் காணலாம். அந்த மலையில் குடுமித் தேவர் எழுந்தருளியிருக்கிறார். அவரை வணங்கலாம்" என்று நாணன் சொன்னான்.

"இந்த மலையை நோக்கி நடக்கும்போதே, என் மனதில் பாரம் குறைவது போல் தோன்றுகிறது. விருப்பமும் மனதுள் பொங்கி விரைகிறது. தேவர் எழுந்தருளியிருப்பது எங்கே..? போ..?" என்று திண்ணன் உணர்வு மேலிட்டு வேகமாக நடந்தான்.

மூங்கில் முத்தையும் அகிலையும் சந்தனத்தையும் மணியையும் சேர்த்து அள்ளிக்கொண்டு, பாய்ந்து வரும் பொன்முகலியாற்றின் கரையை அடைந்தார்கள். அங்கே பன்றியின் உடலைக் கிடத்தினான் காடன். "இங்கு நீ நெருப்புக் கடைந்து பன்றியின் ஊனைச் சமைத்து வை... நாங்கள் மலை ஏறித் தேவரைக் கண்டு வணங்கிவிட்டுத் திரும்புகிறோம்" என்று நாணன் காடனிடம் சொன்னான். திண்ணனும் நாணனும் ஆற்றங்கரை வழியே நடந்து காளத்தியப்பரை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது, உச்சி வெயிலில், வானிலிருந்து தேவ துந்துபி முழங்கும் ஒலி, திண்ணனின் திருச்செவிகளில் கேட்டது. மெய்சிலிரித்துப்போன அவன், திகைத்தவனாய், "இது என்ன ஒலி நாணா?" என்று கேட்டான்.

தேவ துந்துபியின் ஒலியை, அந்த வேடன் எப்படி அறிவான்?... அவன் அறிந்ததைச் சொன்னான்: "இது, இம்மலையின் பெரிய தேனடைகளைச் சுற்றி, தேனீக்கள் மொய்த்து எழுப்பும் ஒலி..." என்று பதில் சொன்னான் நாணன்.

'முன்பு செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெரும் காதல்கூர வள்ளலார் மலையை நோக்கி
என்பு நெக்குருகி உள்ளத்தெழுபெரு வேட்கை யோடும்,

நாணனும் அன்பும் நளிவரை ஏறத்தாமும்
பேணு தத்துவங்கள் எனும் பெருகு சோபானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர்போல ஐயர்
நீள்நிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்'

தவத்தின் பயனாய், நெஞ்சுக்குள் இன்பம் மீதூர, ஆர்வத்தோடு, தேவரை நோக்கி நடக்கின்றான் திண்ணன். அவனுக்கு வழி காட்டுவது நாணன் மட்டுமல்ல; அன்பும், அவன் முன்னால் நடந்து செல்கின்றதாம்.

மற்ற இறையன்பர்கள், தத்துவங்களைப் படித்து அவற்றைப் படிக்கட்டுக்களாக் கொண்டு மேலே ஏறிச் சிவனடி சார்வது போல, நம் ஐயரும் அன்பு எனும் படிகளில் மேலேறிச் சிவனை அடையச் செல்கிறார்.

'திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணா முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்பு விட்டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவம் ஆனார்'

மலையில் ஏக நாயகரைக் கண்டதும், அன்பின் வேகத்தில் ஓடிச்சென்று தழுவினார்: மோந்து நின்றார் : மயிர்க்கண்கள் கூச்செறிய, கண்ணீர் பொழிய 'அடியனேற்கு இவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ' என்று சிவபெருமானைச் 'சிக்கெனப் பிடித்துக் கொண்டான்' திண்ணன். இதையே 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே' என்றார் வள்ளலார் பெருமான்.

*- (தொடரும்...)*

## திருநாளைப் போவார் (தொடர்ச்சி)

மனத்தை உருக்கும் ஒரு மானுட வரலாறு

**(மு. பழனி இராகுலதாசன்)**

5) பெரிய புராணத்தில், "திருநாளைப் போவார் புராணம்" 37-பாடல்களில் அமைகிறது. அவற்றுள் போரேறு விலகி நிற்க, நந்தனார் திருப்புன்கூர்த் தலத்தில் இறைவனை வழிபட்ட பாடலும், அழல் புகுந்து, வேணிமுடி கொண்டெழுந்தார் என்ற பாடலும் கதைப்போக்கில் முக்கியமானவை. திருப்புன்கூர்த் தலத்தில் இறைவனைக் கண்ணாரக்கண்டு வழிபட இயலவில்லை; நந்தி மறைக்கிறது.

"சீரேறும் இசைபாடித் திருத்தொண்டர் திருவாயில்
நேரே கும்பிடவேண்டும் என நினைந்தார்க்கு..."

என்று அமைகிறது பாடல். நந்தனாரின் ஆசை, விருப்பம் இறைவனைக் "திருவாயில் நேரே கும்பிடவேண்டும்" என்பது மட்டுமே. சிவபெருமான் அதனை அறிந்தார்; போரேற்றை விலகி நிற்குமாறு அருள்புரிந்தார். இதுவரை சிக்கல் ஏதும் இல்லை; திருநாளைப் போவார் புராணத்துக்கு, இந்தத் திருப்புன்கூர்க் கோவில் நிகழ்வு அப்படி ஒன்றும் அவசியமானதாகத் தோன்றவில்லை; நந்தி மறைக்கிறது என்ற நந்தனார் வேண்டுகோளும், சிவபெருமான் போரேற்றை விலகிநிற்க அருள்புரிந்தார் என்பதுமான நிகழ்வுகள் இல்லாமலே கதை சொல்லப்பட்டிருக்கலாம். பின்னர், சேக்கிழார் பெருமான் திருப்புன்கூர் நிகழ்வை, மிகுந்த முக்கியத்துவம் கொடுத்துப் பாடியது ஏன்?

புலைப்பாடிப் புலையர் ஒருவர் தில்லைத் திருப்பதி போன்ற பெரிய கோவிலுக்குள் உள்ளே போவதுதான் பிரச்னை; திருப்புன்கூர் போன்ற சிறு தலங்களில், அதுவும் வெளியே நின்று நேரே பார்த்துக் கும்பிடுவதில் பிரச்சனை ஏதும் இல்லை என்று சேக்கிழார் கருதினாரா? திருப்புன்கூர்த் தலத்தில் நந்தனார் நேரே வணங்கக் குறுக்கீடாக மனிதர்கள் யாரும் இல்லை; கல்லால் ஆன நந்திதான் மறைத்தது; "என்னால் முடிந்தது நந்தியைத்தான் சற்றே விலகி வழிவிடு என்று

சொல்ல முடிந்தது; மனிதர்கள் யாரையும் விலகுங்கள் என்று சொல்ல முடியவில்லை" என்று சிவபெருமான் செயல்பட்டார் என்று காட்டுவதற்காகத் திருப்புன்கூர் நிகழ்வு அமைக்கப்பட்டதா? உறுதிபட நாம் ஒரு கருத்துக்கு வர இயலாதென்றாலும், திருப்புன்கூர் நிகழ்வையும் தில்லைத் திருத்தலத்து அக்கினிப் பிரவேச நிகழ்வையும் நாம் ஒப்பிட்டுப் பார்க்கிறோம்; ஒப்பிட்டு, இயல்பாகவே அமைந்து காணப்படும் வேறுபாடு குறித்துச் சிந்திக்கவும் கடமைப்பட்டிருக்கிறோம். திருப்புன்கூர்த் தல நிகழ்வும் தில்லைத் திருத்தல நிகழ்வும் முற்றிலும் வேறுபட்டவை என்றும் வேறுபட்ட இரண்டு நிகழ்வுகளை எதிர்எதிரே நிறுத்திச் சிந்திப்பார் சிந்திக்க என்று சேக்கிழார் பெருமான் சிந்திக்க வழிகோலுகிறார் என்றும் கொள்வதில் முரண்பாடு ஏதும் இல்லை எனலாம்.

6) திருப்புன்கூர் நிகழ்வு மூலம் "அங்கேயும் நந்தனாருக்கு ஆலயப் பிரவேசம் அனுமதிக்கப்பட வில்லை" என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். வெளியில் நின்றவாறே வழிபாடு செய்த நந்தனார், அங்கே பார்த்த ஒரு பள்ளத்தைத் திருக்குளமாக வெட்டித் திருப்பணி செய்தார். திருப்புன்கூர் நிகழ்வுக்குப் பிறகு பக்தி மேலீட்டால் நந்தனார் பல திருத்தலங்களுக்கும் செல்கிறார். அங்கேயெல்லாம் நந்தி மறைத்தலும் பின்னர் விலகுதலுமாகிய நிகழ்வுகள் நிகழ்ந்தனவா? என்று தெரியவில்லை. ஆனால் செல்லும் இடங்களிலெல்லாம் "மெய்த்திருத்தொண்டு செய்தார்" என்று சேக்கிழார் பாடுகிறார். நந்தனார் ஊர் ஊராகச் சென்று குளம் வெட்டும் பணி செய்தார். ஆலயத்துக்குள்ளே சென்று வழிபடும் 'ஆலயப் பிரவேசம்' என்ற பேச்சுக்கே இடம் இல்லை என்று தெரிவிப்பார்போல, சாதுமுனிவர் திரு.வி.க. "அவர்வேறு பல திருப்பதிகட்கும் போந்து போந்து தமது வழித்தொண்டு செய்வார்" என்று மிக மென்மையாகக் குறிப்பு எழுதினார்.

7) திருத்தில்லை செல்லவேண்டும்; சென்று இறைவனை இறைஞ்ச வேண்டும் என்று நந்தனாருக்குப் பக்தி வளர்ச்சி கொள்கிறது. "சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச, உய்த்த

பெருங்காதலுணர்வு, ஒழியாது வந்துதிப்ப" கண்துயிலாது துன்புறுகிறார் நந்தனார். "நாளைப்போவேன், நாளைப் போவேன்" என்று மனம் மருகி, மருகி, நாள்கள் சென்றன. ஒருநாள் முடிவெடுத்துத் தில்லை நோக்கிப்புறப்பட்டார். அந்தணர் கூட்டம், யாகசாலைகள், வேதம் ஓதும் இடங்கள், மடங்கள், பிறவற்றையும் கண்டார்; அஞ்சினார். "இன்னல்தரும் இழிபிறவி இது தடை" என்று துயில்வார். இதுவரை கதை இயல்பாக நகர்கிறது; இனிமேல்தான் சிக்கல்; திருப்புன்கூரில் இறைவன் ஆணையிட்டு நந்தியை விலகியிருக்குமாறு செய்ததுபோல, இறைவன் அந்தணர்தம் கனவில்தோன்றி "நந்தனுக்கு வழிவிடுங்கள், அவன் உள்ளே தரிசனத்துக்கு வரட்டும்" என்று அருள் பாலித்திருக்கவேண்டும்; அதாவது ஆணையிட்டிருக்க வேண்டும்; ஆனால் இறைவன் வேறுவிதமாக ஆணையிட்டான்: நந்தனார் கனவில், "எரியினிடை மூழ்கி முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்" என்றும், தில்லைவாழ் அந்தணர்தம் கனவில் தோன்றி, "எரி அமைக்க" என்றும் ஆணையிட்டான். ஆக, அக்கினிப்பிரவேசம் நிகழ்ந்து விட்டது.

"திருநாளைப் போவார் தீக்குழியை அடைந்து இறைவன் திருவடியை மனங்கொண்டு வலமாய் வந்து, நெருப்பில் மூழ்கினார்; முழுகியதும் அவர்தம் மாயப்பொய்யுடலம் ஒழிந்தது; அவர் பொன்மேனிதிகழும் முனிவராய்ப் பூணூலும் சடைமுடியும் பொலிய எழுந்தார்; ..... திருநாளைப் போவார் தில்லைவாழ் அந்தணர் முதலியவருடன் சென்று, திருக்கோபுரம் கண்டு தொழுது பொன்னம்பலம் புகுந்தார்..." என்று தமிழ்த் தென்றல் புராண வரலாற்றை முடித்து எழுதுகிறார். ஆக, புலைப்பாடியில் வாழ்ந்த நந்தன் என்கிற ஆதிதிராவிட இனத்தானுக்குக் கோவிலுக்குள் பிரவேசிக்கும் உரிமை இல்லை என்பதும் அத்தகைய ஆதி திராவிடன் ஒருவன் பூணூல் அணிந்த, சடாமுடிதரித்த அந்தணன் என மாற்றம் பெற்றால் மட்டுமே ஆலயப்பிரவேசம் நடக்கும் என்பதும் தான் திருநாளைப் போவார் சரித்திரம் சொல்கிறது எனலாம்.

8) ஆக, நந்தன் என்கிற ஆதிதிராவிடன் ஒருவனுக்குக் கிடைத்த

'கடைத்தேற்றம்' என்பது அக்கினிப்பிரவேசம் தானா? என்று நாம் இன்று கேள்விகேட்கிறோம். இன்று நாம் கேட்கிற கேள்வி சேக்கிழார் பெருமானின் ஆழ்மனத்துக்குள் எழுந்திருக்காதா? வரலாற்று உணர்வும் சமுதாயப் பார்வையும் மிக உடைய சேக்கிழார் பெருமானுக்கும் நிச்சயமாக எழுந்திருக்கும். ஆலயப் பிரவேசம் கேட்டவனை அக்கினிப் பிரவேசத்தில் ஆழ்த்துவதும், அவனுக்குப் பூணூலும், சடா முடியும் அணிவிப்பதும் சமுதாய ரீதியாக, ஆன்மீக ரீதியாகப் பொருந்தாத முடிவுகளே என்பது சேக்கிழார் பெருமானுக்குப் புரிந்திருக்கக்கூடிய விஷயங்களே. ஆனால், அன்றைய காலக்கட்டம், சில விஷயங்களை அவரால் தாண்ட முடியவில்லை. புகழ்பெற்ற இக்கால எழுத்தாளர் தி. ஜானகிராமன் தனது சிறுகதையில், ஓர் அந்தண சங்கீத வித்துவான் அரிசனச் சிறுவனுக்குச் சங்கீதம் கற்றுக்கொடுக்கும் போது, அவனை வீட்டின் பின்கட்டு வழியே அழைத்து வந்து, பத்தடி தூரம் தள்ளி உட்கார வைத்துச் சொல்லிக் கொடுப்பதாக எழுதியிருக்கிறார். "அந்த அரிசனப் பையனைப் பின்கட்டு வழியாக அழைத்து வருவதாகவும், பத்தடிதூரம் தள்ளி உட்கார வைத்து அப்பியாசம் சொல்வதாகவும் எழுதியிருக்கிறீர்களே, இது நியாயமா?" என்று கேட்டபோது, அந்தச் சிறுகதையின் ஆசிரியரான தி. ஜானகிராமன் நீண்ட நேரம் யோசித்து விட்டு, "அன்றைக்கு அந்தக் கதையை எழுதும் போது அப்படித்தான் என்னால் எழுத முடிந்தது; பின்னால் வருகிறவர்கள் கால வளர்ச்சிக்கு ஏற்ப வேறு மாதிரி எழுதலாம்" என்று பதில் சொன்னார்.

தெய்வச் சேக்கிழார் பெருமானின் நிலைமையும் அப்படித்தான்; அன்றைய நிலையில் அவ்வளவுதான் அவரால் இயலும் என்றுதான் நாம் ஒருமுடிவுக்கு வரவேண்டும்.

9) சேக்கிழாரின் "திருநாளைப்போவார் நாயனார்" பற்றிய சிந்தனையில் கோபாலகிருஷ்ண பாரதி எழுதிய "நந்தனார் சரித்திரக் கீர்த்தனை" என்ற கீர்த்தனை நாடக நூலின் நினைவூட்டல் மிகவும் அவசியமானது. ஒன்பதாம் நூற்றாண்டில் சுந்தரர், பத்தாம் நூற்றாண்டில் நம்பியாண்டார் நம்பி, பன்னிரண்டாம் நூற்றாண்டில்

சேக்கிழார் பெருமான் முதலான பெருமக்களுக்குப் பிறகு, நீண்ட இடைவெளிக்குப் பிறகு, பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் கோபால கிருஷ்ண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை என்ற நாடக நூலைத் தருகிறார். நந்தனார் எரியில் மூழ்குவது என்ற அக்கினிப் பிரவேசம் கோபால கிருஷ்ண பாரதியின் நூலிலும் இடம் பெறுகிறது. ஆனால், கோபால கிருஷ்ண பாரதியார் தமது கீர்த்தனை நூலில் நந்தனாருக்கும் புலையர்களுக்கும், புலையர்களுக்கும் வேதியருக்கும், வேதியருக்கும் நந்தனாருக்கும் நீண்ட உரையாடல்கள் நடப்பதாக அமைக்கிறார். இந்த நீண்ட உரையாடல்கள் பெரிய புராணத்தில் இல்லை. கோபாலகிருஷ்ண பாரதியின் இந்த நீண்ட உரையாடல் அமைப்பும், அந்தணர் பாத்திர அறிமுகமும் பக்தி நெறிக்குக் குலவேறுபாடு இல்லை என்பதை வலியுறுத்தும் நோக்கம் கொண்டவை என்று இக்காலத் திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுவர். கோபால கிருஷ்ண பாரதி நந்தனாரை உழவுத் தொழில் செய்பவராகக் காட்டி, அவருக்கு எதிராகப் பண்ணைக்காரர் வாதிடுவதாகக் காட்டுவதும் காலத்துக்கேற்பச் செய்யப்பட்ட மாற்றங்கள் என்பர். நந்தன் கதை என்ற நாடகத்தை எழுதிய எழுத்தாளர் இந்திரா பார்த்த சாரதி என்பார், நாடக நூலுக்கு எழுதிய முன்னுரையில், "சேக்கிழாரில் காணப்படாத கதைக்குறிப்பை, அதாவது அந்தணர் வருவதாக அவர் காட்டியிருப்பது, கோபால கிருஷ்ண பாரதியின் மேதா விலாசத்துக்கு ஒரு சான்று" என்று குறிப்பிடுவதையும் இங்கே நாம் நினைவு கொள்ளலாம். சேக்கிழாரின் பெரிய புராணத்து நந்தனார் வரலாற்றைப் படிக்கும்போது, ஆலயப் பிரவேசம் மறுக்கப்பட்டதும், அக்கினிப் பிரவேசத்துக்குள் அழுத்தப்பட்டதுமான நிகழ்வுகளை வெறும் சாதிய, பக்தி ரீதியிலான போராட்டமாக மட்டுமே கருதாமல், பொருளாதாரப் பின்னணியும், நில உடைமைப் பின்னணியும் கொண்ட குடியானவன் - பண்ணைக்காரன் போராட்டமாகக் கருத வேண்டும் (புதிய தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-3, ப.158, சாகித்திய அகாதெமி, சென்னை) என்ற சிந்தனை வளர்ச்சிப் போக்கையும் இணைத்துச் சிந்திப்போமாக!

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**